உ

சிவமயம்.



கொத்தமங்கலம் மேலைக்கோயில்

என வழங்கும்

சூதவன க்ஷேத்திரம்

# மாங்குடியாண்டவன்

# நான்மணிமாலை.

உபநிடதம், மூவர் மும்மணிக்கோவை, பெரியநாயகி
பிள்ளைத் தமிழ் முதலிய செய்யுள் நூல்களின்
ஆசிரியரும்

புதுக்கோட்டை அரசர் கல்லூரித் தமிழாசிரியருமான

பண்டித நா. கனகராஜையர் B.O.L.

இயற்றியது.

கமலா பதிப்பகம், புதுக்கோட்டை

1941.

உ
சிவமயம்.




கொத்தமங்கலம் மேலக்கோயில்

என வழங்கும்

சூதவன க்ஷேத்திரம்

# மாங்குடியாண்டவன்

# நான்மணிமாலை.

உபநிடதம், மூவர் மும்மணிக்கோவை, பெரியநாயகி பிள்ளைத் தமிழ் முதலிய செய்யுள் நூல்களின் ஆசிரியரும்

புதுக்கோட்டை அரசர் கல்லூரித் தமிழாசிரியருமான

பண்டித நா. கனகராஜையர் B.O.L.

இயற்றியது.



கமலா பதிப்பகம், புதுக்கோட்டை

1941.

## உரிமையுரை.

1. புண்ணியமே பொலிந்து பொருள் வளமிகுந்த
வணிகர் வளர் புனித நாட்டில்
எண்ணியவே யடியவர்கட் கியற்றியருள்
சூதவனத் திறைவனருளில்
நண்ணியதே வாரமென விசைத்துளநான்
மணிமாலை நலங்கள் வாய்ந்த
கண்ணியவான் காசியெனும் பெயர்புனையும்
பொருள்வணிகன் கனிந்து கொள்க.

2 சிவதருமம் புரிவதுவே யுலகவாழ் விடையினுறு
சிறப்பா மென்று
பவ தருமம் பொலிவுறவே சூதவனப் பகவனுக்குப்
பணிகள் செய்த
நவதருமம் பொலிவணிகர் வேண்டியவா றதுபுரியும்
நாட்ட முள்ளோன்
தவதருமம் தாங்கியவன் திருவருளால் நெடிதூழி
தழைக்க வாழி

3. தனக்கெனவே யொன்றுமிலா துலகவுயிர் நலம்பெறவே
தனையே நல்கும்

மனத்தோர்டுவாக் கறிவரிய பரம்பொருளேச் சூதவன
வள்ளல் தன்னை

இனத்தொடுகற் பணிபுரியும் கடமைகொளும் வ்ணிகர்
தியைந்த சீர்த்திக் [குலத்

கனத்தனையன் காசியெனும் பெயர்மலியும் பொருள்
கவினுற்ருேங்க. [வணிகன்

4. அறுபதாண் டறநெறிலில் வளர்ந்தவவன் சிவனருளும்
அறமும் காக்க

உறுவதாம் புண்ணியத்தின் பேற்றையடைந் தினும்ப
டுலகில் வாழி [லவாண்

மறுவுரு மனத்தினனென் றுலகுணர மாங்குடிவாழ்
வள்ளல் நல்கும்

பெறுவதாம் பேறனைத்து-மனநிறையப் பெற்றின்பம்
பெருகி நன்றே.

---

உ

# முகவுரை.

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈச னெந்தை யிணையடி நிழலே.

திருநாவுக்கரசர் தேவாரம்.

ஆனந்த வுருவம் தாங்கிய பரமசிவம் என்ற கருணைக் கடலின் அன்பில் ஈடுபடுவதே சைவநெறியாம். சைவநெறியில் மனங்கொள்வோர் சீவர்கள் பசுக்கள் என்பதையும், அப்பசுக்களைப் பிணித்து நிற்பது பாசம் என்பதையும், பாசத்தை அறவேயொழித்துப் பசுத்தன்மை போக்கிச் சிவத்தன்மை நல்கும் தெய்வமே பசுபதி யென்பதையும், சாத்திரங்களால் உணருவர். சைவசித்தாந்தம், நீலகண்ட பாடியத்தானும், சிவஞானபோதம், சிவஞான சித்தியார் முதலிய தமிழ்ச் சாத்திரங்களாலும் நன்கு விளங்குவதாம்.

சைவ குரவருள் இருதிறவர் உளர். சமயகுரவர் என்ற பெருமை படைத்தோர் முன்னே தோன்றிய

நால்வர் ஆவர். சந்தான குரவர் என்பார் பின்னே தோன்றிய பெரியர் ஆவர். சமய குரவர் நால்வரும் தேவார திருவாசகங்களால் சிவத்தின் உண்மையை உலகறிய விளக்கி யுதவினர். சந்தான குரவர்கள் சாத்திரங்களை முறைப்படி அமைத்துப் பரமத நிரா காணமும், சுவமதத்தாபனமும் செய்து சைவ மக்க ளுக்குச் சைவச்செல்வம் தந்து வைத்தனர்.

சைவர் என்ற இனத்தில் இருப்போர் எவரே யாயினும் அவர் தம் முன்னோர் அருளிய தம் நெறி யைத் தெளிவுறப் பயின்று அறிந்து கொள்ளா திருத் தல் பெருங்குறையே. தேவாரம் பாடிய மூவர் முதலி கள் நம் புண்ணிய நாடு எங்கும் நடந்து சென்று, ஆங்காங்கு இருந்த சிவதலங்களுக்குத் தம் அருளிச் செயல்கள் தந்து, சிறப்புச் செய்தனர். அன்னார் பாடிய பெருமைபெற்ற தலங்களை இந்நாளிற் சைவர் ஆவார் எல்லாரும் திருக்கயிலை நிகர் எனவே மதிக்கின் றனர். அத்திருத்தலங்களிற் பல இந்நாளிற் பழமை யான கோவில் கோபுரம் முதலியவற்றைக் கால வேறு பாட்டால் இழந்து, பக்தி சிரத்தையோடு ஆகம நூல்

கள் அறிந்த பெரியோர் தெளிவித்த வண்ணமே புதுமையில் அமைக்கப்பெற்ற திருப்பணிகளோடு விளங்குகின்றன.

இங்ஙனம் தமது பழம்பெருமை விளக்கும் சிவ தலங்களின் திருப்பணிகள் பண்டை நாளில் தமிழ் மன்னர்களால் சில ஒழுங்குகளின்படி நன்கு நடை பெற்றன. அம்மன்னர் குடிகள் இன்று இல்லாமை யால் தமிழகத்தில் உள்ள செல்வக் குடிகளே இந்தச் சிவ தருமத்தை ஏற்றுக்கொள்வது முறையாயிற்று. காவிரிப் பூம்பட்டினம் பெரு நகரமாய் இருந்த காலத்தே சோழன் கரிகாற் பெருவனத்தான் ஆதரவு பெற்று, நாட்டின் வாணிகத்தை நன்கு வளர்த்து, எட்டிப்பட்டமும் அப்பட்டத்துக்குரிய பொற்பூவும் பெற்ற பொருள் வணிகர் குடிகளில் வழி வழியே வந்த நகரத்தார்கள் இன்று இத்தரும கைங்கரியத்தில் ஈடுபட்டுள்ளனர்.

தேவாரப் பாடல் பெற்றும் தமிழகத்தே இன்ன திசையில் உள்ளன என்று பலர் அறியாது மறைந்திரு ந்த சிவதலங்கள் எல்லாம், இந்நாளில் இக்குலத்தார்

தருமத்தால் பெரும் பொருட் செலவாலியன்ற திருப் பணிகள் பெற்று, உலகம் அறிய விளங்குவதை அறியாத தமிழ் மக்களும் உளரோ? 'திரைகடலோடியும் திரவியம் தேடு' என்ற முதுமொழியைத் தமது குல தருமமாகக் கொண்ட இந் நல்லோர், கடல் கடந்து தேடிய செல்வக் குவியலைத் தருமத்துக்குப் பயன்படுத்துவதை இன்றும் பல தலங்களிற் காணலாம்.

சிவாலயத் திருப்பணிகளுக்குக் கோடிக்கணக்கான பொருட் குவியலை இக்குலத்தோர், மன நிறைவோடு கொடுத்து, முன்னின்று தருமங்களை நடத்துவதைத் திருமறைக்காடு, திருவானைக்கா முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களில் இன்றும் காணலாம். வேத வேள்விகளை நிந்தனை செய்யும் மக்கள் பெருகி வரும் இந்நாளிலும், வேத பாடசாலைகளுக்கு இவர்களைப்போல உதவுவார் பிறர் இல்லை. ஆகம, தேவார பாடசாலைகளும் இந் நகரத்தார் தருமத்தால் உயர்ந்த சிவ தலங்களில் இன்றும் நன்கு நடைபெறுவதைக் காண்கிறோம். அன்னவிக்ரயம் ஒரு தொழிலாக வளர்ந்துவிட்ட இந்நாளிலே மகோதய புண்ணிய காலத்தில்

கோடிக்கரையில் கடலாடித் திருமறைக்காட்டுச் சிவ பரஞ்சுடரைத் தரிசனம் செய்ய வந்த பல்லாயிரம் மக்களுக்கு, இக்குலத்தார் அன்னமிட்ட அருமையை ஒவ்வொரு சீவன் உள்ளத்திலும் இருக்கும் சிவபரஞ் சுடரே அறிவான்,

இங்ஙனமாக எவ்வகைப்பட்ட சிவ தருமத்துக் கும் தம் செல்வத்தை நல்கும் இக்குலத்தோர், பழம் பெரும் கோயில்களைப் புதுக்கும் பணியில் ஈடுபட்ட அளவில் நின்றுவிட்டனரோ! 'எங்கும் ஈசன் என்னாதவர்க்கில்லையே' என்ற அப்பர் திருவாக்கைச் சிந்தித் துத் தாம் தாம் குடியிருக்கும் ஊர்களிலும், சில் புது மைக் கோவில்களை அமைத்து, அவற்றிலும் பெரும் பொருட் குவியல் செலவிட்டுத் திருப்பணிகள் செய்து இம்மை மறுமை இன்பம் தேடுகின்றனர். நகரத்தார் வாழும் நகரங்களில் ஒன்றிலேனும் சிவாலயம் இல்லை என்று இன்று எவரும் துணிந்து உரைக்க இயலாது. இவ்வாலயங்களிற் சில பழமையாக அமைந்த மரபின் உரிமையால் இவர்களுக்கு வந்தவை. சில தமிழ் நாட்டு மன்னர் பின்னாளில் அமைத்து வைத்தவை

சில இவர்களே புதுமையின் அமைத்தவை, எவ்வகை யிற் சேர்ந்தனவாயினும் இக்கோயில்களில் இன்று வேதமோதும் அந்தணரும், தேவாரம் ஓதும் ஓதுவார் களும், ஆகம நெறிப்படியே நித்திய நைமித்திக பூசை புரியும் சிவத்துவிசரும், திருப்பணிக்குரிய பிறபணியா ளரும், முறைப்படியே அமைந்து பண்டைப் பெருங் கோவில்கள் போலவே இவை விளங்குவதைக் கண் ணுள்ள எவரும் கண்டு உணர்ந்திருப்பர்.

பெரு நகரங்களிலே ஆலய தரிசனம் செய்ய வரு வோர் தொகை சுருங்கியிருப்பினும் இந் நகரங்களில் உள்ளம் உருகி, அன்போடு ஒரு நாளில் இருமுறை மும்முறை வந்து வணங்கி, வரம் பெற்றுச் செல்லும் ஆண் மக்களையும் பெண் மக்களையும் எவரும் காண லாம். இங்ஙனம் சிவமணம் கமழும் திருக்கோயில் கள் உள்ள செட்டி நாட்டில் கொத்தமங்கலத்தின் ஒரு பால் மேலைக் கோயில் என்று பொது மக்கள் அறியும் சூதவனம் என்ற திருத்தலம், சிவகங்கை மன்னர் திருப் பணிகளுள் ஒன்ருகும். இக்கோயில் திரு ப்பணியைப் பல்லாண்டுகளாக நன்கு நிறைவேற்றிப்

பூலோக கைலாசம் போல விளங்குமாறு செய்த சிவ புண்ணியம் கொத்தமங்கலத்து நகரத்தாருக்குரியது. தரும நெறிகளில் மிகவும் ஈடுபாடு கொண்ட இந் நகரத்தார் பிரதிநிதியாக இத் திருக்கோவிலின் திருப்பணியையும், நித்திய நைமித்திகாதிகளையும் முறையே நடைபெறச் செய்யும் பேறு பெற்ற சிவநெறிச் செல்வர் திருவாளர் சி. சு. சி. வேலஞ் செட்டியார் குமாரர் சின்னக்கருப்பன் செட்டியார் என்ற காசி செட்டியார் ஆவர். இச் சீமான் இளமையில் சில ஆண்டுகள் கடல் கடந்து அயல் நாடுகளிற் பொருளீட்டி யிருந்து, சென்ற இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகச் சிவ புண்ணியத்திலேயே ஈடுபட்டுத் தம் ஊரிலேயே இருந்து தரும கைங்கரியபரராக வாழ்ந்து வருகின்றார்.

நன்னெறியில் நாட்டம் உடைய இவர் இறைவன் அருளால் அறுபதாண்டு நிரம்பப்பெற்றுச் சிவாகம முறைப்படியே ஷஷ்டியப்த பூர்த்தி சாந்தி செய்து கொள்ள இருக்கின்றார். அந்த மங்கள நாளில் சிவ பரஞ்சுடர்க்கு உவப்பாகிய ஒரு பதிதருமம் செய்ய

விருப்பம் கொண்டு, இப்பிரபந்தத்தை இயற்றுவித்துள்ளார். இப்பிரபந்தம் சதுர்வித புருஷார்த்தங்களையும் அடியார்களுக்கு அருளவல்ல அறவாணனை மாங்குடியாண்ட மறைப்பெரும் பொருளை, மனமார வாயாரத்துதித்துப் பாடப்பெற்றதாகும். நான்கு பொருளும் தரவல்ல தலைவனை நால்வர் அருளிய திருப்பாடல்களைச் செவியேற்ற பரமனை, நான்கு வேதங்களும் முறையிட நின்ற நம்பனை, நான்கு மணிகள் கோத்த தமிழ் மாலையால் வாழ்த்தி வணங்குவது முறையே யன்றோ.

பண்டைப் புலவரும், சிவநெறிச் செல்வரும் பாடியருளிய அரும்பொருட் பேழைகளாகிய பாட்டுக்களைக் கேட்டு, உருகியிருக்கும் உள்ளம் உடைய சிவனடிச் செல்வர்களுக்கு இப்பிரபந்தம் அத்துணை இன்பம் விளையாதாயினும், அவன் புகழே புகல்வதாகையால் உவப்புக்குரியதாம் என்றே துணியலாம். சிவபரஞ்சுடரின் திருவருள் பரவுக உலகெலாம்.

ஆசிரியன்.



உ

சிவமயம்.

கொத்தமங்கலம்-சூதவனம் என்ற மாங்குடித் தலத்தில்
கோயில்கொண்ட

# மாங்குடி யாண்டவன் நான்மணி மாலை.

---

காப்பு.

திருமேனி விநாயகர்

ஆசிரிய விருத்தம்.

ஒளிவிளங்கு திருமேனி நாதனென வுலகுணர
வுயர்ந்தோர் போற்ற
அளிவிளங்கு திருவுருவோ டமர்ந்திருக்கும் சூதவனத்
தமலன் றன்னைக்
களிவிளங்கு நான்மைமணி மாலையினாற் போற்றுதற்குக்
கருணை செய்யும்
வளிவிளங்கு கோயிலுறை திருமேனி விநாயகனும்
வள்ளல் தானே.

முருகப்பெருமான்.

அருள்பொழியும் விழிகளினா லடியவரைப் பார்த்தருளி
யன்னூர் வேண்டும்

பொருள்பொழியுங் கரங்களுளமாங்குடியாண்டவன்
கழல்கள் போற்றும் செய்யுள்

தெருள் பொழியும் நயம்பெறவே சூதவனப் பதியிருந்த
தெய்வச் செல்வன்

மருள்பொழியு மவுணர்குலங் களைந்தவறு முகன்
கழல்கள் வணக்கம் செய்வாம்.

## வயிரவக் கடவுள்.

வேண்டுபவர் வேண்டுவதே யீந்தருளும் சூதவன
விமலன் றளிற்

பூண்டுதிரு வருள்பொழிய வியற்றமிழ்நான்
மணிமாலை புனையும் வண்ணம்

நீண்டதிரு வுருவமொடு தனைநினையு மன்பர்மன
நிறையா நிற்கும்

ஆண்டவனை வயிரவனைக் கழல்பணிந்து திருவருளை
யடைந்து வாழ்வாம்.

## சௌந்தர நாயகியார்.

தன்னையருள் மலிவதனு லுணர்த்தியருள்
சூதவனத் தலைவன் றளிற்

பொன்னையருள் புவியையரு ளனவிழைந்து
நயம்பொருந்தப் புனையும் பாடற்

கன்னியரு ளுருவமுடை யம்பிகை யன்னவனிடத்தி
லமர்ந்து வாழும்
என்னையுல கன்னைசவுந்தரவல்லி தாண்மலர்கள்
இறைஞ்சல் செய்வாம்.

## மாங்குடி யாண்டார்.

அவனருளே துணையாக வவன்கழல்கள்
வணங்குவதே யமைவா மென்று
சிவனருளை யுணர்பெரியர் தெளிவுறுத்த
நெறிமுறையே திருவின்மிக்க
தவமலியுஞ் சூதவனப் பெருமான்றன் திருவடிக்கே
தமிழின் மாலை
நவமலியப் புனைவதனுக் கவனருளே மனநிறைய
நாடுவோமே.

## நூல்.

### வெண்பா.

அன்பே திருமேனி யாக்கி யருள்பொழியும்
இன்பேறு சூதவனத் தெந்தையே—நின்பேர்
நினைந்தவரைச் சொற்றவரை நின்னருளே காக்கப்
புனைந்தவுரு வென்றே புகல். 1

### கட்டளைக் கலித்துறை.

புகலைப் புகல்பவர் வாழ்வுறச் செய்தருள் புண்ணியனே
இகலைப் புரிவினை மாற்றிய மாங்குடி யெம்மிறையே
புகலிப் பெருந்தகை மூவாண்டிற் சூட்டுப் புதுத்தொடையல்
அகலத் தணிந்தனை யன்பரை யாண்ட வருளுருவே. 2

### ஆசிரிய விருத்தம்.

உருவ முடையா யென்பர்சிலர்
உருவ மில்லா யென்பர்சிலர்
உருவ வருவ முடையை யென
வுணர்ந்து விளக்குஞ் சிலநூல்கள்
பருவ மழைபோ லடியருக்குப்
பழமை யருளைப் பொழிகின்றாய்
சருவ வுருவ மாங்குடியாய்
தருதல் வேண்டும் நினையெமக்கே. 3

### ஆசிரியப்பா.

எமக்கென நீயிவ ணிருந்தரு ளினையென்ல்
உமைக்குமுன் மக்கள் ஒரிரு வருக்கும்
விளங்கிய வுண்மை; விபுதரும் முனிவரும்
மறைமொழி புகன்று மனமுற வேண்டியு

மெளிதின் வெளிப்படா விறைவநீ யருளால்
புனையவும் புகழுவு நினையவு மறியேம்
வேண்டிய பேறுகள் ஈண்டுறப் பெறுவான்
நின்னுரு நீயே பன்னிய மறையும்
நால்வர் நினக்கென நவில்திரு மறையும்
செவிக்கொளும் விருப்பாற் சேர்ந்தனை யீங்கு
மாங்குடி யாண்ட மறைப்பெரும் பொருளே
கதிரவன் மண்டலம் முதிருரு விளங்கிய
தெளிவே யொளியே தெருளே மருளே
நின்செய லறியே மெஞ்செய லறிதிநீ
ஆதலி னெமக்கெது வமையுமோ
அதனை யின்னே யருளுதி யமலனே. 4

வெண்பா.

அமலனே வெண்ணீ றணிந்ததிரு மேனி
அமலனே சூதவனத் தண்ணல்—மூமலத்தால்
வாடு முயிர்கள் மனக்கோயில் மேவுநினை
நாடு நினைவெமக்கு நல்கு. 5

கட்டளைக் கலித்துறை.

நல்குங் குணமுந் திறமும் பொருந்திய நாதனினைப்
பல்கும் பனுவல் மணமாலை சூட்டிப் பணிபவர்கள்

அல்குங் குறையின ராகுவர் மாங்குடி யாண்டவநிற்
புல்குஞ் சவுந்தர நாயகி சான்று புரையறவே. 6

## ஆசிரிய விருத்தம்.

புரையறுமெய்ந் நூல்பயிலும் பேறுடைய சான்ற
புகழ்ந்து போற்றும் [வர்கள்
கரையறுபே ரருட்கடலே சூதவனத் திருமேனிக்
கடவு ணீயே
வரைமிசையி லமர்ந்தனையோ வுயிரகத்து மறைந்தனை
மறையின் சென்னி [யோ
விரைகெழும விருந்தனையோ நினதுநிலை வாய்மலர்ந்து
விளக்கு வாயே. 7

## ஆசிரியப்பா.

விளக்க முடைய வெளியுறு பொருளே
துளக்க மகன்ற சோதி பராபர
எண்ணரு வகைமையி னியன்றபல் லுயிர்களும்
நண்ணவு நினையவு நல்கிய நாயக
தாழ்வினி லிருந்து தயங்கிய மக்கள்
வாழ்வினை யடைந்துய மலர்ந்தருள் விழியினை
பதினொரு வேதியர் முதுமறை மூன்றும்

சுதியொடு புகன்று துதித்தனர் பரவி
மந்திர போதி வகைவகை யமைந்த
சுந்தர நற்குடஞ் சொரிநீ ராடிய
அருள்கெழு மாங்குடி யாண்டவெம் பரம
பொருள்கெழு வணிகர்கள் போற்றிய சங்கர
சிவமயம் விளக்கிய திருக்குள மிருபாற்
பவமலம் கெடுக்கப் பார்த்தருள் பொழிந்து
காரண வொருமை காட்டிய செல்வ
நாரண னுன்முக னடியு மறியாப்
பூரண புராண புண்ணிய மூர்த்தி
ஆரண நான்கும் அடிமலர் தருவிய
உருவிலா லொருவ வுலகமே யாகிய
பொருவிலாப் பொருளே போற்றினேம்
அருளினு லெம்மை யாண்டருள் கெனவே. 8

வெண்பா.

னவே நுமையா ளியல்பெனவே காட்டி
மனமே நினதாக்கும் வள்ளல் — கனமேயும்
சூதவன மேவியருள் சோதியே நின்பணியே
மாதவமாப் பூண்டிருக்க வை. 9

## கட்டளைக் கலித்துறை.

வைப்பென நின்னை யுணர்ந்தவர்க் கெல்லா வரமுமருள்
திப்பிய நாயக வேதந் தெளியாத் திகம்பரமெய்
ஒப்பனை செய்ய வரியவ மாங்குடி யுத்தமநின்
மெய்ப்புகழ் பாடிய நாவருள் தாண்மலர் வீழ்பவர்க்கே. 10

## ஆசிரிய விருத்தம்.

வீழ்வினை மருவா வண்ணம் மெய்யருள் பொழிந்துகாத்து
வாழ்வினை யருளும் வள்ளல் மாங்குடிக் கோயில்உள்ளான்
காழ்வினை நம்மைப் பற்றிக் கலக்குமென் றினைதல்வேண்டா
தாழ்வினை மாற்றும் வள்ளல் தமிழினுக் குருகுவானே. 11

## ஆசிரியப்பா.

உருக்கமும் மறைமுடி யுள்ளமெய்ப் பொருளும்
பெருக்கமும் இனிமையும் பிறபல நயமும்
இயல்புற வமைந்த வீரிரு குரவர்
செயல்புனை திருவடிச் செவ்விய வுருவ
கருதிய கருத்தின் கணக்கினு ளடங்கா
அருவுள வுருவுள வருவுரு வுள்ளவ
நீயே நின்புகழ் நிகழ்த்திய வடமொழி
நாயே மறியா நன்மைகள் விளக்குமே

நினையுணர் நால்வர் நிகழ்த்திய தமிழ்மறை
அனையென வப்பனு மாமென நின்னைப்
பலபடி யாகப் பகர்ந்து விளக்குமே
குலமுறை குணநிலை குறித்திட லொண்ணுத்
தலைமைய தத்துவ சான்றவர் சான்றவ
பொருள்வளம் பொருந்திப் புண்ணிய நெறியிடை
மருள்கெடச் செல்லும் மக்களால் மலிந்த
நாட்டினைக் காத்தருள் நற்பணி பூண்டனை
எட்டினு ளடங்கா விசைப்பெருங் கடலினை
இயன்ற வளவில் இசைத்தே மெனினும்
மயன்ற வெங்குறைகள் மறந்தனை யாளுதி
மாங்குடி மேவிய வள்ளால்
யாங்குடி கொளுமுல கிருந்தரு ளிறைவனே. 12

## வெண்பா.

இறைவனிவ னென்றே யிருநிலத்தோர் தேற
மறைமுழங்கு சூதவன வள்ளல்—பொறையும்
நிறையு மமைந்துள்ள நேயமலி நெஞ்சில்
உறைவனிஃ துண்மை யுணர். 13

## கட்டளைக் கலித்துறை.

உணரவும் போற்றவும் பாடவும் வல்ல வுனதடியார்
மணமலி பைந்தமிழ்ப் பூந்தொடை சாத்தி வணங்குகின்றார்
குணநிறை வேதியர் கூடிய மாங்குடிக் கொற்றவநின்
வணமது தேர்ந்தவர் யாருளர் கூறுதி வாய்திறந்தே 14

## ஆசிரிய விருத்தம்.

வாயாற் புகழ வருகிலையே
மனத்தால் நினைக்க வருகிலையே
தாயாக் கருது முலகவுயிர்
தமக்குள் மறைந்த தனிச்சுடரே
மாயாப் பெருமை வருநிலையில்
வணங்குவாரை நிறுத்துதற்காச்
சாயா வளங்கொள் சூதவனம்
தனில்வாழ் செம்மைப் பரஞ்சுடரே. 15

## ஆசிரியப்பா.

சுடருரு வெனச்சிலர் சொல்வா ருளரே
இடருறு மருளுரு வெனச்சில ரறைபவே
மதிமுடி பவனென வழுத்துப சிலரே
சுதிமுடி யெனச்சிலர் சொல்வது முளதே
மாங்குடி யியல்திரு வளர்பூங் கோயிலில்
தாங்குடி கொண்டருள் தனிப்பரம் பொருளேயே. 16

## வெண்பா.

பொருள்தருதி யென்றே புகழ்புனைவார் பல்லோர்
மருளகற்றுஞ் சூதவன வள்ளால்—இருள்யலங்கள்
போக்கி யருள்கியெனப் போற்றுகின்ற நாயடியேம்
வாக்குமலி செல்வம் வளர். 17

## கட்டளைக் கலித்துறை.

வளர்வதுந் தேய்வது மில்லது வாய மதிநிலத்திற்
கிளர்வுறு செம்மைப் பரஞ்சுடர் வெள்ளிக் கிரிமகிழும்
தளர்வறு வாழ்வினன் மாங்குடி மேவிய தண்ணளியான்
அளவறு மாற்றலன் சேவடி சேர்மின்க ளன்பர்களே. 18

## ஆசிரிய விருத்தம்.

அன்புருவச் செம்மணியை நாடுதிரே யிருக்குமிடம்
அறைவன் கேளீர்
இன்புருவக் கீதமிசை குயிலினங்கள் இளவேனிற்
கிடங்கள் தேடி
நன்புருக வடைவதுவாம் சூதவனத் தடியவர்தம்
நலங்கள் நாடி
நன்பருவக் காரெனவே வீற்றிருப்பன் திருமேனி
நாத னென்றே. 19

## ஆசிரியப்பா.

என்று மிருக்கு மிறைமை பொருந்திய
நன்றியல் வீட்டி னலமறி யுளத்தர்
அன்பி னெறியினை யவனியோ ருணரப்
பலவகைக் குலங்களிற் பவமெடுத் தடைந்து
தம்மையே மறந்து தமக்குறு மின்ப
துன்ப மெவையும் சுமப்பவ னவனென
வுலகினில் வாழ்ந்துதம் முள்ளத் துள்ளிய
கடைப்பிடி யொன்றே கருத்தாக் கொள்ளுபு
இல்லினைத் துறக்கவும் இன்னுயிர் துறக்கவும்
இன்பம் துறக்கவும் இருவிழி துறக்கவும்
துணிந்த பெரியர் தூய்மைசால் இயற்பகை
மெய்ப்பொருள் குயவனார் வியன்கண்ணப்பர்
கல்லா னெறிந்தே கடவுட் பதம்பெறு
சாக்கியர் இதய தாமரை மலர்ந்த
நம்பனைக் காண நாளைப் போவேன்
எனவே நித்தலு மியம்பிய பெரியர்
இன்னு மின்னன நன்னய வன்பினர்
எத்துணைச் சான்றவர் இருந்தனர் தமிழகத்
தத்துணைப் புண்ணியர் அடித்துகள் படிந்த
நிலத்தினில் வாழ்வுறு நிறைநல னடைந்தேம்
வடமொழி மறையும் வளத்தமிழ் மறையும்

பத்துச் செவியினும் பற்றொடு கேட்டு
மகிழ்வுறு மிறைவனை மாங்குடி வாணனை
கொத்த மங்கலம் குடிகொளும் வணிகர்
பொன்பொலி குலத்தினர் புரிதிருப் பணிகளை
அருளொடு மேற்றுள வமலப் பிரானை
எல்லாம் வல்ல விறைவனை நினையவும்
இறைஞ்சவும் பரவவும் இயல்நலம் புனைந்தேம்
எம்முடைப் பெரும்பே றெவர்க்கும்
இம்மையி னுளதுகொ லெனவிசைத் திடுவமே. 20

### வெண்பா.

இடுமின்கள் கூவிளமும் இன்புனல்கொண் டாட்டித்
தொடுமின்கள் வேதத் தொடையல்—வடுவின்றிச்
செம்மை யுருவத் திருமேனி நாதனையே
இம்மை நினைவீ ரிருந்து. 21

### கட்டளைக் கலித்துறை.

இருப்பது மெய்யெனப் போவது பொய்யென வெண்ணினரும்
பொருப்புறை தெய்வத்தை மாங்குடிக் கோயிலிற் பூரணனை
விருப்புறு நெஞ்சொடு போற்றுதல் செய்யின் விமலனருள்
இருப்பது மெய்யெனத் தேர்வர் மறைத்தெளி வின்னதுவே

## ஆசிரிய விருத்தம்.

இன்னலற வாழ்வதுவே கருத்தென்னி லெளியவழி
யியம்பா நின்றேம்
கன்னலொடு செந்நெல்மலி சூதவனத் தறம்பொலியக்
கனிந்து வாழும்
தன்னனைய பரம்பரனைச் சதாசிவனைச் சங்கரனைச்
சமய மெல்லாம்
இன்னனென வறிவரிய பரம்பொருளை மனமார
விறைஞ்சு வீரே 23

## ஆசிரியப்பா.

ஈரிரு மறைகளெய்யா மெய்யன்
நாலே ழாகம நவிற்றிய நாவினன்
மானத மடுவினில் வளர்நிழல் கதுவும்
கயிலையி லிருந்த கருணை வாரிதி
பசுவென விருந்த பலதிறச் சீவனும்
பாச மகன்றுதன் பதமல ரணுகப்
பசுபதி யெனவே படர்ந்த வொருபொருள்
தோடுடைச் செவியன் பீடுடைப் பிரம
புரமுறை பவனெனப் புகலியர் குழவியும்
கூற்றேயாயின கொடுமை விலக்கிலிர்

அதிகைக் கெடிலத் தம்மானென்ன
நாநயம் பொலிந்த நாவுக் கரசும்
பித்தா பிறையணி பெருமானென்ன
நாவலூர் நம்பியும் நமச்சிவாயவென
மணிவா சகரும் வாய்மலர்ந்தருளிய
திருமுறை கேட்டுத் தெவிட்டாச் செவியன்
எவரெவர் எவ்வெவ் வியல்பினி லுருவினில்
நினைத்தனர் புகழினும் நேரினின் றருள்வோன்
கங்கை கரந்து பொங்கிய சடையன்
மதிநுத லுமையினை மணப்பதன் பொருட்டுத்
தெற்கு நோக்கித் திருத்தவம் புரிந்த
அற்புத புராதன வநாயம மூர்த்தி
அறிவி னெல்லைக் கடங்கா வறிவுரு
வமைந்தோன் கருணையா லைந்தொழில் புரிந்தும்
ஒன்றினும் பற்றிலா வொருபெருந்தேவன்
சிவகோசரியார் செயுமறைப் பூசனை
மகிழ்வுடனேற்றும் வாய்நீர்தெளித்து
முடிமலர் தூவி முறையற வெச்சிலூன்
ஊட்டிய திண்ணனர் உள்ளம் புகுந்தோன்
கொத்த மங்கலக் குடக்கினி லமைந்த
குயில்வளர் மாங்குடிக்கோயில் கொண்டோன்
சிவநெறி விளக்கிய சிவாகம மோதிப்
பொழுது மூன்றினும் பூசனை புரியும்
ஏகாம் பரரென விசை சிவாசாரியர்
வழிபா டுவந்தருள் வள்ளற் பரம்பொருள்
தனக்கென வொன்றையும் தழுவான்
எமக்கென யாவும் இனிதி னியற்றுமே. 24

### வெண்பா.

இயற்கை யரசிருக்கு மேர்வனத்திற் சிற்பப்
பயிற்சி சிறந்தோன் படைத்த — செயற்கைநலம்
பொங்குதிருக் கோயிலுறை பொன்போற் றிருமேனி
அங்கணனை நெஞ்சே யடை. 25

### கட்டளைக் கலித்துறை.

அடையார் திரிபுரம் வேவ வெரித்த வணிநகையான்
தொடையா ரிதழியின் பூங்கோவை வாசகர் சொற்றொடுத்த
நடையார் திருக்கோவை தன்னொடுஞ் சூடிய நாயகனம்
மிடையார் கருணையின் மாங்குடி வாழ்வுறு மெம்மிறையே.
26

### ஆசிரிய விருத்தம்.

இறைவனுக்குப் பணிபுரியுந் திறமறியேம் அவன்புகழை
இசைக்கும் நான்மை
மறையினுக்குப் பொருடெளியும் அறிவுவளம்
படைத்துமிலேம் வாக்கின்செல்வர்
நறைமலர்ச் செந்தமிழ்த் தொடையாந் தேவாரம்
இசையோடு நவிற்றவில்லேம்
பொறையிருக்கு மாங்குடியிற் புராந்தகனை
நனுகலெங்ஙன் புகலுவீரே. 27

## ஆசிரியப்பா.

எங்ஙனம் புகலுவல் எங்ஙனம் புகலுவல்
இங்ஙன மிலனே யிங்ஙன மிலனே
எனநான் மறைமுடி யெய்யா துயங்கிய
இறையெவன் யாண்டைய னெத்தகை யியலினன்
யாவகைச் செயல்கள் மேவலுற் றுள்ளான்
நெடியனோ குறியனோ நீலனோ செய்யனோ
வெள்ளிய வுருவனோ வொள்ளிய வொளியோ
இருளோ தெளிவோ மருளோ பொருளோ
குணங்குறி யுளனோ குணங்குறி யிலனோ
உலக வுயிர்களி னுறுதொடர் புளனோ
உயிரு முடலுமா யுறுநிலை யுளனோ
காட்சிக் குரியனோ கருத்துக் குரியனோ
ஆயிரம் கண்ணனோ ஆயிரம் வாயனோ
ஆயிரம் கையனோ ஆயிரம் காலனோ
ஆயிரம் பெயரனோ அணுவோ மலையோ
ஒரும்யாம் தெளிவுற நேரினில் வருமோ
வாரா து மறைந்தே மயக்கி யலைக்குமோ
வெனவே யெண்ணி யெண்ணி வனத்திடைத்
தவம்புரிந் துயங்கித் தம்மையே மறந்து
சிவமய மாகத் திரிந்தோர் சிலரே
உண்டியு முறக்கமு முடையு நடையும்

இன்பமுந் துன்பமும் எய்தினர் விலங்கென
வாழ்ந்தனர்; மாய்ந்தனர்; தாழ்ந்தவர் பலரே;
பிறந்த வுயிரெலாம் பேரின் படைந்துயர்
சிறந்த நெறியிடைச் சேர்வது தருமென
மறைபுகன் றருளிய வாய்மைகள் கேட்டும்
எத்துணைப் பிறவி யெடுத்தன வுயிர்கள்
இறவியும் பிறவியும் இல்லாப் பெருநிலை
நாடிய மனமுள நல்லுயி ரெத்துணை
நிலமகள் தாங்கொணு நீள்பெரும் பொறையென
வாழ்பவர் மக்கள் வகுப்பிடை யிருந்தும்
மாக்களே யாகுவர் வல்லான் வகுத்த
வாய்க்கால் வழியே மறைத்தெளி வறிய
முயலுநன் மக்களே யுயலுறு பவரென
இனிது தெளிவுறுத் திறைஞ்சுவார்க் கருளும்
மாங்குடி யாண்ட மறைச்செழும் பொருளே
யாங்குடி யுயர்வா னெம்முள முறைகவே, 28

வெண்பா.

உறைகவெனச் சொல்லி யுளக்கோயில் செய்யும்
மறையவன்றன் நெஞ்சத்து வந்த—இறையவனைச்
சூதவன மேவுஞ் சுடரொளியைப் போற்றுதற்கு
மோதமிகத் தாழ்த்திர் முடி. 29

### கட்டளைக் கலித்துறை

முடியால் நடந்து கயிலையைக் காணும் முறையறியேன்
கடியார் மலரெனக் கண்மலர் சாத்தும் கலையறியேன்
செடியார் வினைகளை யைந்தெழுத் தோதிச் செருக்கறியேன்
அடியான் எனச்சொல லெங்ஙன மாங்குடி யண்ணலுக்கே 30

### ஆசிரிய விருத்தம்.

அண்ணற் களிற்றின் பிடரமர்வுற்
றரசு பொலிந்த வரசரெலாம்
திண்ணற் கருளுஞ் சிவபுரத்துச்
செல்வன் றிருத்தாள் நினையாரேல்
வண்ணக் குயில்சூழ் மாவடியில்
வளரும் பொருளை யறியாரேல்
உண்ணற் குணவும் உடையுமிழந்
துலகி லிரந்தே யுழல்வாரே. 31

### ஆசிரியப்பா.

உழலு நெஞ்சே யொருமொழி கேளாய்
தழலென நிமிர்ந்த தனதடி முடியை
இருவர் தேடியும் ஒருவரு மறியார்

மீண்டது கண்டு மெய்ப் பொருள் விளக்கிய
வேத புராதன வேத்தியன் றன்னை
ஆயிர நாமத் தமலனை யொருமுறை
ஐந்தெழுத்தோதி யவனருள் துணிந்து
நெற்றி நிறைவுற நீற்றினை யணிந்து
கண்மணி பூண்டு விண்மணி யுள்ளுறை
பொருளே மறைமுடி போதரு தலைவ
இருளே மலிந்த வென்னகம் வந்தனை
அழுக்கெலா மகற்றி அன்புறு கோயில்
கொள்ளுதி யென்னக் குறித்தனை நினைத்தி
வண்டு படியா மலர்கள் பறித்திட்
டருச்சனை புரியும் அருட்பணி பூணுதி
நன்னீராடி நம்பனைப் பேணுதி
அவன்புகழ் நாவுற வன்பொடு மோதுதி
அறிவினுக் கெட்டா வவன் செயலறியும்
அடியர் தம்மினத்தில் அவனையே காணுதி
ஆயிர மலர்களா லருச்சனை செய்ய
ஆயிரங் கரங்க ளடைதல் வேண்டா
ஒருகரத் துணையால் உள்ள முருகி
ஒருமல ரெடுத்தவன் திருவடி யிட்டால்
எவ்வகைப் பேறும் எளிதினி லெய்தலாம்
வேதமுணர்ந்தோர் வேதத் துள்ளுறை

விமலனை யுணர்ந்து மெய்ப் பொருள் தெளிக
வேதமொழியினை யோதவு முணரவும்
அறியா யென்னினும் அதனாற் குறைபிலை
நால்வர் அருள்மொழி நயந்தனை யோதுக
அவர் மொழி மறையென வறிந்தனை தெளிக
இசையொடு மொருபாட் டெந்தை திருச்செவி
யேறப் புகலும் இறைபணி பூண்க
தமிழ் மறை யோதவும் தமிழ்மயப் பொருளினை
நாடவும் தெளியவும் ஞானமிலாயேல்
ஓதுவா ரோதும் போதரு கிருந்து
பிறவினை யின்றி யறவனை யறிக
அன்னது புரியவும் ஆற்ற லிலாயெனில்
எவ்வழி யிருப்பினும் எப்பணி பூணினும்
சிவம் சிவ மெனவே யவன் பெயர் சொல்லியும்
நினைந்துந் திரியும் நிலைகைக் கொள்ளுக
சிவமய மாகிய சிவனடி யவரைக்
காணுங் காலைப் பேணி வணங்குக
முன்னை வினைகள் மூண்டு வருவன
பின்னையும் வினைகளைப் பெரிதும் திரட்டி
வாழுதி யாதலின் மற்றவை யொழிந்து
பேரானந்தப் பெருங் கடல் குளிக்க
வழியெனக் கொத்தமங்கலத் தருகே
தென்னையும் சாலியும் செறிந்த நிலத்தே

அழகுருச் செல்வி யருமறைத் தலைவி
சவுந்தர நாயகி தனக்குறு துணையாய்
மக்கள் இருவரும் மகிழ்ந்தனர் காண
வயிரவன் காவல் மகிழ்ந்து வீற்றிருக்கும்
உயிரினை யறிவினை யொன்றினை யன்பினை
நாடொறு மறைமுறை நன்னீ ராட்டம்
கொண்டருள் கொழுந்தினைக் குலமறையவர் மொழி
மறைகளும் திருமுறை மறைகளும் செவிக்கொள
விழைந்த விமலனை விழைவும் வெறுப்பும்
இல்லா வருளுரு விறைவனை
நல்லா யென்னி னயந்தனை வாழ்தியே. 32

### வெண்பா.

வாழ்வருள வல்லானை மாங்குடியை யாண்டானைத்
தாழ்வகலப் போற்றும் தலையினரே — ஏழ்பிறப்பும்
பொன்முடிகொள் மன்னவராய்ப் பூவுலகில் வாழ்ந்தவன்றாள்
பின்முறையே சேர்வர்பெரும் பேறு. 33

### கட்டளை கலித்துறை.

பேற்றினை நல்கிய மெய்ப்பொரு ளாகிய பிஞ்ஞகனை
நீற்றினை யாடிய மாங்குடி வாழ்வுறு நித்தியனைச்
சாற்றினை நல்லடி யார்பொருட் டெய்திய சத்துவனைக்
கூற்றினை மாற்றிய தாளனைத் தேடினிர் கூடுமினே. 34

### ஆசிரிய விருத்தம்.

கூட்டுவதுங் குறைப்பதுவு மவனருளே யெனத்தெளி
    கும்பிட் டேத்திப் [ந்து
பாட்டுரைத்து மனமகிழும் பரிசினர்கள் மனிசரடி
    பணிந்து வாழ்த்தி
வேட்டுளசில் பொருளுதவ வேண்டியிரந் தறிகிலரே
    வேதந் தேடும்
ஆட்டுடைய வம்பலனை மாங்குடியி னுண்டவனை
    யறிக நெஞ்சே. 35.

### ஆசிரியப்பா.

நெஞ்சே நல்லார் நின்னினு முளரோ
ஐம்பொறி வாயிலா லனந்தம் பொருள்களை
அறியும் ஆற்ற லமைந்தனை யாயினும்
அவைகளை யொடுக்கி யகமுறப் புகுந்தங்
குறைதரு மொருவனை யுவப்பொடு நாடும்
நினைவு சிறிது நின்னக முளதே
புலன்வழி செல்லும் பொறிகளை யீர்ப்பது
அருமை யினருமை யதனினு மருமை
நின்னு ளிருக்கும் நிறைவினை யறிதல்
இப்பெரும் பணியினை யான்புரிந் துய்ய
இறைவனெம் பெருமா னெல்லாம் வல்லான்

சிவகங்கை மன்னன் திருப்பணி விழைந்தோன்
பொன்பொலி வணிகர்தம் அன்பும் பணியும்
அருளால் மருவியே யருமறை செவியுற
வெவ்வகைச் செல்வமும் செவ்விதி னிறையும்
குலங்குடி மலிந்த கொத்த மங்கல
மேலைக் கோயிலில் விருப்பொடு முறைவோன்
சவுந்தர நாயகி தழுவிய தோளினன்
மறைமொழி புகன்று மந்திர மோதி
ஆகம நெறியே யருச்சனை யியற்றும்
இயல்பினின் வழாத ஏகாம் பரநற்
சிவமறை யவர்தம் திருமுடி யேறிய
திருவடி யுடையோன் ஒருபகல் ஒருமுறை
நினைபவர் தமையும் நிறைதிரு வருளிக்
காத்துவந் திருக்கும் கருணைப் பெருங்கடல்
எனக்கென வுதவிய வின்றுணை நீயே
ஆதலி னின்னைநன் கமையப் பெறுவான்
யான்புரி செயல்களை யெனக்கெடுத் தியம்புதி
நீயும் யானும் நெறிதுணிந் தேகின்
இந்திர னுலகமும் மந்திர மறைகளை
வழுவா தோதிய மறையவ னுலகமும்
திருமகள் கொழுநன் மருவிய வுலகமும்
அறியாப் பெரும்பே றடங்கிய சிவனுலகு

அடைக்குவ தெளிதே யாகு மன்றியும்
ஒன்றினை யிழையா வுயர்நெறி பூணினும்
உலகிடை யெல்லா வுயர்வு மெய்துமே
எனை நீ நண்பனென் றெண்ணுதி
னியான் விடாது நேடுவன் அருளையே. 36

வெண்பா.

அருளையே தன்னுருவ மாக்கிய வம்மான்
பொருளையே வைத்துப் புனைந்த—தெருளுடையார்
பாட்டுள் மறைந்த பரங்கருணை மாங்குடியான்
ஆட்டுள் விருப்பமுள ளும் 37

கட்டளைக்கலித்துறை.

ஆமெனத் தேறுக வன்றெனச் சொல்க வவனிலையை
யாமுளத் தெங்ஙன மோர்முடி வின்க ணிசைத்திடலாம்
காமனைக் குட்படு நெஞ்சினர் காணுக் கடவுளினைக்
காமனைக் காய்ந்த விழியனை மாவடிக் காணுமினே. 38

## ஆசிரிய விருத்தம்.

காணும் விழியும் நினைமனமும்
கனிந்து சிவனார் திருப்பணியே
பூணுங் கரமும் அவன்கோயில்
பொழுது மூன்றும் வலம்வரவே
பேணும் கழலு முடையோரே
பெறுவார் கயிலைப் பெருவாழ்வு
நாணுங் கருத்தோர் மாங்குடிவாழ்
நம்பன் செயலை யறியாரே. 39

## ஆசிரியப்பா.

அறிய மூயலுத லரிதே யம்ம!
விறகிற் கனலென விரிந்த வுலகெலாம்
மறைவுறு மொளிமய வள்ளலை யிறையைப்
பாலினுள் மணமுறப் பரந்துள நெய்யென
எவ்வுயி ரகத்து மெங்குமா மொருவனை
மணியினிற் சோதிபோல் வயங்கிய வவனை
ஆயிரம் வழிகளா லறிதரு மறைகளும்
இன்னவ னிவனென விசைத்தன விலவே
அறிவி னெல்லை யகன்று புறஞ்செலு
மன்புரு வாகிய வவனை யறிந்தவர்

யாருளர் யாருளர் யாருள ரெனவே
பெரியர் யாவரும் ஒருபடி புகலுவர்
அமரரு முனிவரும் அறிகிலா வவனுரு
வெளியினி லறியவோர் தெளிநெறி யுளதே
உலகெலா மவனே யுயிரெலா மவனே
உடுவெலா மவனே யுவரியு மவனே
விண்ணினும் மண்ணினும் விரிந்தபல் தோற்றமும்
அவனே யவனலா தமைவன வில்லையே
ஆதலி னினையே மவனே யென்பார்க்கும்
அவன் செயலன்றி யாவன வில்லையே
உயர்வினு ளுயர்ந்த வுயர்வு மவனே
தாழ்வினுட் டாழ்ந்த தாழ்வு மவனே
பெரிதினுட் பெரிய பெருமையு மவனே
நுண்ணிதி னுண்ணிய நுட்பமு மவனே
சிறிதினிற் சிறிய சிறுமையு மவனே
தெளிவினிற் றெளிந்த தெளிவு மவனே
மருளினில் மருண்ட மருளு மவனே
முன்னுற முளைத்த முதுமையு மவனே
முளைத்த லறியா முழுமுதலவனே
பின்னுற வெழுந்த பீடுசால் புதுமையும்
இளமையும் வளமையும் எழிலு மவனே
ஆணும் பெண்ணும் அல்லவு மவனே

ஆதலி னுலகிடை யங்கு மிங்கும்
காண்பன வனைத்துங் கருணைக் கடலாம்
அவனே யென்னும் அறிவினை யடைந்து
மக்கள் விலங்கென வருமுயிர்க் கெல்லாம்
நன்மையே நினைந்து நமச்சிவாயவெனும்
மந்திர மோதி வழிபிழையாது
புண்ணிய வினைகள் புரிந்து வாழ்வீரேல்
அவனரு ளொளிதினி லடைதலாகும்
உத்தமர் நிறையுங் கொத்த மங்கலத்
துரிய நெறிகளால் உறுபொரு ளீட்டித்
தலைவனுக் குரிய தருமம் புரிவதே
விரத மெனக்கொளும் விச்சைசால் வணிகர்
சிவகங்கை மன்னன் தினந்தினம் பணியும்
சிவபரஞ் சுடர்க்குச் செயலுறப் பொருந்துமென்
றெண்ணி யமைத்துள வெழில்வளர் கோயிலுள்
அறுமுக முருகனும் ஆனை முகத்தனும்
வடுக நாதனும் மருங்கினிலிருப்ப
உலக நாயகி உவமையில் நாயகி
அழகி னாயகி யருளா நாயகி
சவுந்தர நாயகித் தையல் துணையொடும்
தன்னடி பணிந்தவர் தமக்கு நலமெலாம்
இன்னே யருள்செய விருக்குமெம் பெருமனே
பொன்னே புரையப் பொலி திருமேனி

வள்ளலை மாவடி வாழ்வுறு நாதனை
ஒரு முறை மனத்து ளுணர்பவர்க்
கரியவு முளவென வறையுமோ வன்பே.

### வெண்பா.

### வாழ்த்து.

வாழிய மாவடிவாழ் வள்ளல் கழன் மலர்கள்
வாழிய சௌந்தர வல்லிகழல் — வாழியரோ
உள்ளமுற வன்னுரை யோதியுணர் மெய்யொழுக்கிற்
றெள்ளியரெல் லோரும் சிறந்து.

---

உ

சிவமயம்.



கொத்தமங்கலம் மேலைக்கோயிலென வழங்கும்

சூதவன க்ஷேத்திரம்

# சௌந்தரநாயகி மாலை.

---



உ

சிவமயம்.

கொத்தமங்கலம் மேலக்கோயில் என்ற

# சூதவனத் திருத்தலத்தில்

கோயில்கொண்டருளிய

# சௌந்தரநாயகிமாலை

---

காப்பு.

**கட்டளைக் கலித்துறை.**

திருமலி மாங்குடிக் கோயிலின் வாழும் சிவைவிமலை
அருள்மலி தேவியைப் போற்றிப் புனையும் அணிதொடையல்
உருமலி யைங்கரன் ஏரம்பன் வேதத் துளபொருளாம்
தெருள்மலி யோங்கார தெய்வத்தை வாழ்த்திச் செயப்படுமே

## நூல்.

பொன்மை யுருவத் திருமேனி நாதனைப் போற்றுபவர்
வன்மை நலம்பெற வெவ்வகை வாழ்வு மலர்ச்சிபெற
இன்மை யகன்றிட நின்கடைக் கண்ணேக் கினிதருள்வாய்
நன்மை பொருந்திய மாங்குடிச் சௌந்தர நாயகியே. 1

வாளு மயிலொடு சூலமுங் கொண்டு மயிடனைச்செற்
ருளு மடியவர் நன்னல மெய்துற வாண்டவளே
தாளு நினைந்து மணமலர் சூட்டித் தணிபவர்க்கு
நாளு மருளுதி மாங்குடிச் சௌந்தர நாயகியே. 2

அன்னை யெமக்கருள் வாழ்வுகள் யாவும் அருள்வலியால்
நின்னை முறைப்படி யுள்ளத்தின் வைத்து நினைந்தறியேம்
பொன்னை வெலுந்திரு மேனி மணந்த பொலங்கொடியே
நன்னய மல்கிய மாங்குடிச் சௌந்தர நாயகியே. 3

வல்லவர் தேறிய வேதத்து ணின்ற மலர்க்கழலான்
இல்லவர் வேண்டிய செல்வத்தை நல்கும் இயல்புடையாள்
அல்லவர் காணுத் திருமேனி நாதனை யன்புபுரி
நல்லவர் நெஞ்சினை மாங்குடிச் சௌந்தர நாயகியே. 4

அஞ்சலி செய்பவர் எண்ணிய வெண்ண மனைத்துமுற
நெஞ்சினி னின்று நிறைவிக்கு மன்னை நிமலைபரை
வஞ்சக மின்றிய மெய்த்தளி தேடிய வாழ்வுடையாய்
நஞ்செயல் கொண்டருள் மாங்குடிச் சௌந்தர நாயகியே 5

தேவார மோதியு நான்மறை யோதியுந் தெய்வநினைப்
பாவாரஞ் சாத்தியு நண்ணி வணங்கும் பழவடியார்க்
கோவாத மெய்த்திரு நல்கிய வுள்ள வுவப்புடையாய்
நாவாரப் போற்றுவ மாங்குடிச் சௌந்தர நாயகியே. 6

மாச்சினை நின்று தமிழ்ப்பாட் டிசைப்புறு மாங்குயிலின்
தேச்சுவை பொங்கிய கீதங்கள் கொண்ட திருச்செவியாய்
பேச்சினை யெண்ணத்தைச் செய்கையை நின்கண் பிடித்தருள்வாய்
நாச்சுவை நன்குணர் மாங்குடிச் சௌந்தர நாயகியே. 7

பொன்கொடு பற்பல நாடுகள் சென்று பொருள்திரட்டி
நின்கழல் போற்றிய நெஞ்சின ராகிய நின்கிளைஞர்
அன்பொடு நல்லறம் யாவையுந் தாங்கு மறவணிகர்
நன்குடி போற்றுதி மாங்குடிச் சௌந்தர நாயகியே. 8

சிவகங்கை மன்னன் திருப்பணி வேண்டிய தெய்வமெனத்
தவகங்கை யாகிய யோகியர் காணுந் தனிமையெனப்
புவகங்கை யென்று புலவர்கள் போற்றப் பொலியிரண்டு
நவகங்கை கொண்டருள் மாங்குடிச் சௌந்தர நாயகியே 9

வானம் வழங்கி நிலவள மல்க மனங்கொளுவாய்
தானம் வழங்க வறம்பல வோங்கத் தருமிறைவீ
மோனம் பொருந்து முனிவருங் காணு முழுப்பொருளே
ஞானம் வழங்குதி மாங்குடிச் சௌந்தர நாயகியே. 10

## வாழ்த்து.

வாழிய மாங்குடி வாழும் திருமேனி வள்ளல்கழல்
வாழிய சௌந்தர நாயகி யோங்கார வல்லிகழல்
வாழிய மெய்ப்பணி பூண்ட சிவகங்கை மன்னர்குடி
வாழிய நல்லறம் தாங்கும் பொருள்பூண் வணிகர்களே.

